மூன்ருவது அத்தியாயத்தில் அதனை அடையும் வழிகளை நமக்கு விளக்கியிருக்கிருர். எனவே தெளிவாகச் சொல்லுமிடத்து, நாம் யக்ஞம் செய்யும் வழக்கத்தைப் பிறவியிலிருந்தே அடைந்திருக்கிரேம் என்றே கூறலாம். பிறருக்கு நன்மை செய்வதற்காகவே இவ்வுடல் நமக்களிக்கப்பட்டுள்ளதென்றும், இக் காரணத்தாலேயே யக்ஞம் அல்லது பரோபகார சேவை செய்யாமல் தன் வயிற்றை மட்டும் நிரப்பிக்கொள்வோன் திருட்டு உணவையே புசிப்பவனுகிருன் என்றும் கூறி கீதோபதேசகர் கடுமையாக எச்சரித்துள்ளார். தூய வாழ்க்கை நடத்த விரும்புவோனுடைய சகல காரியங்களும் யக்ஞரூபமாகவே நடைபெறும். நாம் பிறக்கும் பொழுதே யக்ஞம் செய்யும் சுபாவத்துடன் பிறந்தோம் என்பதன் கருத்து என்னவெனில், நாம் வாழும் ஒவ்வொரு க்ஷண நேரத்திற்கும் நாம் இந்த உலகத்திற்குக் கடன்பட்டவர்களாகிரேம் என்பதேயாம். ஆகவே நாம் எப்பொழுதும் இந்த உலகத்திற்கு அடிமைகளாகவே இருக்கிரேம். ஒரு யஜமானன் தன் பணியாளன் புரியும் ஊழியத்திற்கு ஈடாக அவனுக்கு உணவும், உடையும் கொடுத்து வருவதே போலவே நமக்கும் இவ்வுலக நாயகனுன கடவுள் நம்மிடமிருந்து அடையும் ஊழியத்திற்கு பதிலாக நமக்கு உணவும், உடையும் அளித்து வருகிருர். அவற்றை நாம் நன்றியுடன் ஏற்கவேண்டும். நமக்குக் கிடைக்கும் பொருள்களின் பேரில் நமக்கே உரிமையுண்டென்று கருதுவதும், அப்பொருள்கள் கிடைக்காவிட்டால் எஜமானன் மீது குற்றம் சுமத்துவதும் கூடாது. இவ்வுடல் அவனுடையது. மனமிருப்பின், இதை வைத்திருக்கட்டும். இன்றேல் அழித்துவிடட்டும். இம்மாதிரியான நிலை துன்ப மயமானதல்ல; இரங்கத்தக்கதுமல்ல.

நாம் நமது ஸ்தானத்தை அறிந்து கொள்ளுவோமானால், இக்கருத்து நமக்கு இயற்கையானதாகவும், இன்பமான தாகவும், விரும்பத்தக்கதாகவும் தோன்றும். இது போன்ற சுகத்தைப்பெற நிலை பிரழாத சிரத்தை தேவையாகும்.

தன்னைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், யாவற்றையும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்து விட வேண்டும் என்ற உபதேசத்தையே சகல மதங்களும் போதிக்கின்றன.

எனினும் இக்கருத்தைப்பற்றி எவரும் பயப்படத் தேவையில்லை. மனதைத் தூய்மையாக்கிக் கொண்டு சேவை செய்யத் தொடங்குவோனுக்கு அதன் அவசியம் நாளுக்கு நாள் தெளிவாகத் தெரிவதோடு அதில் அவனுக்கு ஆர்வமும் அதிகரித்துக் கொண்டேயிருக்கும். தன்னலத்தைத் துறக்க விரும்பாதவனுக்கும், தன் வாழ்க்கையின் நோக்கத்தை அறிந்து கொள்ள விரும்பாதவனுக்கு மட்டுமே பரோபகாரப்பணி புரியும் வழிகள் கடினமாகத் தோன்றும். அவனது பணிகளில் தன்னலத்தின் சாயல் தோன்றிக்கொண்டே இருக்கும். ஆனால் இது போன்ற பொருக்கி எடுத்த சுயநலக்காரர் உலகில் மிகச்சிலரே உளர். நாம் அறிந்தோ, அறியாமலோ நாமனைவரும் ஏதேனும் தன்னலமற்ற பணியைச் செய்து கொண்டே இருக்கிறோம். இவ்விதம் நாம் அறியாமலே நம்மால் செய்யப்படும் இந்தப் பரோபகாரத் தொண்டை மட்டும் நாம் அறிந்தே மனப்பூர்வமாகச் செய்யத் தொடங்குவோமானால், நமது பரோபகாரத் தொண்டின் அளவும் தரமும் நாளுக்கு நாள் அபிவிருத்தியாகிக் கொண்டேயிருக்கும். அதில்தான் நமக்கு யதார்த்தமான இன்பமும், உலகத்திற்கு நிரந்தரமான மங்களமும் ஏற்படும்.

(e)

# யக்ஞம் — 2.

[illegible]

28—10—30.

யக்ஞத்தைப்பற்றி சென்ற வாரம் சிறிது எழுதி [illegible] பின்னரும் எனக்குத் திருப்தியேற்படவில்லை. பிறந்த கணத்திலிருந்தே நாம் நம்முடன் கொண்டு வந்துள்ள ஒரு பொருளைப்பற்றி மேலும் சிறிது அதிக மாகச் சிந்திக்க முற்படுவது வீ ஞ ன காரியமாகாது. எனவே மீண்டும் எழுதுகிறேன். யக்ஞம் நாம் தினசரி செய்யவேண்டிய கடமையாகும்; அறுபது நாழிகையும் அனுஷ்டிக்கப்படத்தக்கதொரு காரியமாகும். இவ்வித கருத்தைக் கொண்டும், யக்ஞம் என்பதற்குப் பரோப காரம் அல்லது பொதுஜன சேவை என்ற அர்த்தத்தைக் கொண்டுமே "பரோபகாரய ஸதாம் விபூதயக" என்ற பழமொழி தோன்றிற்று எனக்கருதுகிறேன். (பிறர் நன்மைக்காகவே நமது பொருள் உபயோகிக்கப்பட வேண்டும் என்பதே இந்தப் பழமொழியின் பொருள்.) பலனை எதிர்பாராமல் செய்யப்படும் சேவை பரோபகார மாகாது. அது தன் தர்மத்தை அல்லது கடமையைச் செய்ததேயாகும். உதாரணமாக நம் கடனைத் தீர்ப்பது பரோபகாரமான காரியமல்ல. அது நமக்கு நாமே செய்து கொள்ளும் சேவையேதான். தன் மேலுள்ள சுமையை இறக்கி வைத்த மாதிரியேதான். தன் தர்மத்தை அல்லது கடமையைச் செய்ததேயாகும். இதே மாதிரி பலனை எதிர்பாராமல் செய்யப்படும் பணிகள் பல பரோப காரமாகா. யாராவது சாதுக்களின் செல்வந்தான் பரோப காரத்திற்கேற்றது — அதாவது பிறர் நன்மைக்கானது

என்று கருதுவதுதான் சரியோவென்றால், அதுவும் சரியல்ல. மானிடனாகப் பிறந்த ஒவ்வொருவனுடைய பொருளும் பணி புரிவதற்கே செலவிடப்படவேண்டும் என்பதே சரியான அர்த்தமாகும். இத்தகைய எண்ணம் ஏற்பட்டவுடன் வாழ்க்கை முழுவதும் சுகபோகங்களை அனுபவிக்கும் சபலத்திற்கு முடிவேற்பட்டுவிடும். வாழ்க்கை தியாக மயமாக மாறிவிடும். ஒரு மனிதன் செய்யும் தியாகமே அவனது சுகபோகம் என்று கூறலாம். மிருகத்தின் வாழ்க்கைக்கும் மனிதனுடைய வாழ்க்கைக்குமுள்ள வேறுபாடே இதுதான். வாழ்க்கை என்ற பதத்திற்குக் கொடுக்கப்பட்ட இவ்விளக்கமானது வாழ்க்கையையே வறண்ட பாலை வனமாகச் செய்து விடுகிறது; கலாச்சாரத்தையே அழித்து விடுகிறது என்று அநேகர் ஆட்சேபித்து, மேற்கண்ட விஷயத்தைத் தோஷமுள்ளதாகக் கருதுகின்றனர். ஆனால் என்னுடைய எண்ணங்களின்படி இவ்வாறு கூறுவோர் தியாகம் என்ற சொல்லுக்கு அனர்த்தம் கற்பிப்பதாகவே கொள்ளலாம். தியாகம் என்பதற்கு ஜன சமூகத்திலிருந்து விலகி, வனவாசம் செய்வது என்று அர்த்தமல்ல. ஆனால் வாழ்க்கை என்ற தொழிலையே தியாக உணர்ச்சியுடன் நடத்தி வர வேண்டும் என்பதே சரியான அர்த்தமாகும். குடும்ப வாழ்க்கையானது தியாக மயமாகவும் இருக்க முடியும்; போக மயமாகவும் மாற முடியும். செருப்புத் தைத்தல், உழவுத் தொழில் செய்தல், வியாபாரம் செய்தல், க்ஷவரத் தொழில் செய்தல் போன்ற தொழில்கள் அனைத்தையுமே தியாக உணர்ச்சியோடும் செய்யலாம். அல்லது சுக போகத்தைப் பெறும் ஆசையோடும் அவற்றைச் செய்யலாம். யக்ஞ நோக்கத்துடன் வியாபாரம் செய்பவன் கோடிக்கணக்கான ரூபாய்களுடன்

புழங்கிக்கொண்டு, அதில் ஈடுபட்டிருப்பினும், ஜன சேவையின் எண்ணமே அவனிடம் மேலோங்கிக் கொண்டிருக்குமாதலால் எவரையும் ஏமாற்றத் துணியான்; செய்யக்கூடாத சாகஸச் செயல்களைச் செய்ய முற்பட மாட்டான். கோடிக்கணக்கில் செல்வம் அவனிடமிருப்பினும், தூய – எளிய வாழ்க்கையையே நடத்தி வருவான். கோடிக்கணக்கில் சம்பாதித்தாலும், எவருக்கும் துன்பம் விளைவிக்கமாட்டான். எவருக்கேனும் துன்பம் ஏற்படுவதாகக் கண்டவுடன், அந்தக் கோடிக்கணக்கான செல்வத்தையும் லட்சியம் செய்யாமல் அதனைத் துறந்து விடுவான். இதுபோன்ற வியாபாரிகள் என் கற்பனையில் தான் இருக்க முடியும் என்று எண்ணிச் சிரிக்க வேண்டாம். அதிருஷ்ட வசத்தால் உலகில் இது போன்ற வியாபாரிகள் மேற்கு, கிழக்கு ஆக இரு உலகிலும் சிலர் இருக்கிருர்கள். விரல் விட்டு எண்ணக் கூடிய மிகச் சொற்ப அளவிலேயே அவர்களது எண்ணிக்கை இருப்பினும், உயிர் உள்ள உதாரணமாக அவர்கள் இருக்கையில், கற்பனைப் பாத்திரங்களாக ஏன் கருத வேண்டும்? பட்வான் என்ற ஊரில் இதுபோன்ற ஒரு தையல்காரன் இருப்பதை ஆசிரமவாசிகள் அனைவரும் அறிவார்கள். அத்தகைய நாவிதன் ஒருவன் இருப்பதை நானறிவேன். நம்மிடை அத்தகைய நெசவாளியொருவன் இருப்பதை ஆசிரமவாசிகள் யாரே அறியார்? தேடித் துருவிப் பார்ப்போமானுல் எல்லாத் தொழில்களிலும் யக்ஞத்திற்காகவே — சேவைக்காகவே தம் தொழிலை நடத்திக்கொண்டு, அதற்காகவே வாழ்ந்து வரும் பலரை நாம் கண்டிப்பாகக் காண முடியும். இது போன்ருேர் தங்கள் தொழில்கள் மூலம் தங்கள் ஜீவனத்திற்கான ஊதியத்தைப் பெற்றுக்கொள்ளுகிருர்கள்

என்பது மெய்யே. ஆனாலும் அத்தகையோர் ஜீவனத்திற்காக மட்டும் தொழில் செய்யவில்லை. ஜீவனம் என்பது அவர்களது தொழிலில் பிரதானமற்ற இரண்டாவது குறிக்கோளேதான். மோதிலால் என்ற அந்த பட்வான்வாசி முதலிலும் தையல்காரனாகவே இருந்தான். ஞானமேற்பட்ட பின்னரும் தையல் வேலையே செய்து வருகிறான். எண்ணங்கள் மாறியதால், அவனது தொழிலே யக்ஞரூபமாக் மாறிவிட்டது. தூய்மை ஒளி வீசத் தொடங்கியது. தொழிலில் பிறரது நலனைக் கோரும் எண்ணமே மேலோங்கிவிட்டது. அதே சமயத்தில் அவனது வாழ்க்கையில் கலையும் கலந்துகொண்டது. யக்ஞமயமான வாழ்க்கையானது கலையின் உச்ச நிலையை அடைந்ததாகும். உண்மையான சாரம் அதில்தான் அடங்கியுள்ளது. ஏனெனில் நாள்தோறும் அதில் புதுமையான ரச ஊற்றுக்கள் பொங்கிப் பெருகும். அதைப் பருகிய மனிதனும் திருப்தியடைவதில்லை; அந்த ஊற்றுக்களும் வற்றி — வறண்டுபோவதில்லை. இந்த யக்ஞம் நமக்குச் சுமையாகத் தோன்றினால், அது யக்ஞமாகாது. நமக்கு விருப்பமில்லாமல் செய்யப்படுவது தியாகமாகாது. சுக போகத்தின் முடிவு நாசமே. தியாகத்தின் முடிவு அமரத்தன்மையாகும். ரசம் என்பது ஒரு தனிப்பட்ட பொருளல்ல. அது நமது செயல்களிலேயே அடங்கியிருக்கிறது. ஒருவனுக்கு நாடக அரங்கிலுள்ள திரைச்சீலைகளைக் கண்டதும் ஆனந்தம் ஏற்படுகிறது. வேறு ஒருவனுக்கு வானில் தினந்தோறும் தோன்றும் இந்திர ஜால காக்ஷிகளைக் கண்டதும் உவகை மேலிடுகிறது. எனவே ரசம் என்பது நன்றாகச் சிந்தித்து அறிய வேண்டிய பொருளாகும். சிறு வயதில் எது ரச

மென்ற உருவில் கற்பிக்கப்படுகிறதோ, எது ரசமென்ற பெயரில் மக்களிடை புகுத்தப்படுகிறதோ, அதுவே ரச மெனப்படும். ஒருவனுக்கு ரசம் நிரம்பியதாகத் தோன்றும் விஷயம் மற்றொருவனுக்கு ரசமற்றதாகத் தோன்றுவது முண்டு. அதற்கு உதாரணமாகப் பலரை நாம் கண்டி ருக்கிறோம்.

யக்ஞம் அல்லது பொது ஜனத்தொண்டு செய்து வரும் பல தொண்டர்கள் தாங்கள் பலனைக் கருதாமல் பணி செய்து கொண்டிருப்பதால், பொதுஜனங்களிட மிருந்து தங்கள் தேவைக்கேற்பவும், தேவைக்கு மீறியும் கூட வசதிகளைப் பெற்றுக் கொள்ளத் தங்களுக்கு அதி காரம் உண்டு என்று கருதுகிறார்கள். இம்மாதரியான எண்ணம் ஒரு தொண்டனின் மனதில் எப்பொழுது உதிக்கிறதோ, அப்பொழுதே அவனது தொண்டின் தரம் கெட்டு விடும்; அதிகார வெறி தோன்றிவிடும். சேவை, பணி என்பவற்றில் சுய சௌகர்யங்களைப் பற்றிய எண்ணம் எழவே இடமில்லை. சேவகனுடைய நலனை எஜமானனே — கடவுளே கவனித்துக் கொள்ளுவார். கொடுக்கவேண்டிய நேரம் வரும்பொழுது கொடுப்பார். பணி புரியும் தொண்டர்கள் கிடைத்தது லாபம் என்று யாவற்றையும் தாங்களே எடுத்துக்கொள்ளக்கூடாது. தேவைக்கேற்றதை மட்டும் எடுத்துக் கொண்டு, மீதியைத் துறந்துவிட வேண்டும் — தனக்கு வேண்டிய வசதிகள் — நன்மைகள் ஏற்படாவிடினும், அமைதியாகக் கோப தாபப்படாமலும், மனதில் வருத்தம் கொள்ளா மலும் இருத்தல் வேண்டும். யக்ஞம் செய்பவனுக்குப் பிரதி பலன் – சேவைக்குக்கூலி – யக்ஞமேதான்; பணியே தான். அதிலேயே அவன் ஆனந்தமடையவேண்டும்.

இந்தப் பொது ஜன சேவை செய்வதில் கூலி யில்லாத வேலையைத் தட்டிக் கழிக்கக்கூடாது. அதைக் கடைசியில் செய்யலாம் என்று கருதி, விட்டுவிடவும் கூடாது. நம் வேலையை முதலில் முடித்துக்கொள்வோம். பிறருடைய வேலை கூலியின்றிச் செய்யப்படுவதுதானே? எனவே அதை வேண்டா வெறுப்புடன், இஷ்டப்பட்ட பொழுது செய்யலாம் என்று கருதுபவன் யக்ஞத்தைப் பற்றி அ, ஆ வன்று கூட அறியாதவனே. சேவை — பணி செய்வதில் 16 வித சிங்காரங்களும் பூர்த்தி செய்யப் பட வேண்டும். தன் கலைத்திறன் அனைத்தையும் அதில் செலவிட வேண்டும். முதலில் பிறர் சேவை; பின்னரே சுயசேவை என்ற பழக்கம் ஏற்படவேண்டும். சுருக்கமாகச் சொல்லுமிடத்து, சுத்தமான — யதார்த்தமான சேவை செய்பவனுக்கு தன்னுடையதென்று எதுவுமே கிடை யாது. அவன் யாவற்றையும் கிருஷ்ணார்ப்பணம் செய்த வனாகிறான்.

## யக்ஞம் — 3.

[சொந்தக் கடிதங்களிலிருந்து]

சர்க்காவைப் பற்றியும், பிரெஞ்சு பாஷையைப் பற்றியும் நீ எழுதியுள்ளதில் கொள்கையளவில் குறை காணப்படுகிறது. சர்க்காவில் நூற்பதற்கென்றே ஒதுக்கிவைக்கப்பட்ட நேரத்தில் வேறு காரியங்களைச் செய்யவே கூடாது. அதுசமயம் யாராவது பேசுவதற்கு வந்து சேர்ந்தால், மரியாதைக்காகச் சிறிது பேசலாம். ஆனால் பேசுவதற்கு பதில் ஏதேனும் ஒன்றைக் கற்பித்தால் என்ன என்ற வாதம் இங்கு எடுபடாது. பேசிக் கொண்டிருக்கையில் எப்பொழுது வேண்டுமானாலும் அதை நிறுத்திக் கொள்ளலாம். பேச வந்தவரும் நெடு நேரம் உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருக்க மாட்டார். ஆனால் ஆசானாக மாறிவிட்டாலோ, நம் முழு நேரத்தையும் வேறு வழியின்றிப் பாடம் போதிப்பதில் செலவிடநேரிடும். சர்க்காவில் நூல் நூற்பதை ஒரு பணியாகக்கருதி, அதற்காக முறைப்படி ஒரு நேரத்தை ஏற்படுத்திக்கொண்ட தொண்டனுக்கே இவையனைத்தும் பொருந்தும். நூல் நூற்கையில் வேறுவிஷயங்களில் மனம் லயித்திருந்தால், நூற்பின் வேகமும், தரமும், சீரும் கண்டிப்பாகக் குறைந்துவிடும். ரோமே ரோலாந்து அல்லது பிதோவன் பியானோ என்ற மேல்நாட்டு சங்கீதக்கருவியின் அருகில் அமர்ந்து, அதை இசைப்பதாகக் கற்பனை செய்துபார். அச்சமயம் அந்த மேதாவிகள் வாய்திறந்து பேசவேமாட்டார்கள். அவர்களது மனதில் வேறு எண்ணங்களே அப்பொழுது எழா; பியானோ இசைப்பதிலேயே லயித்துநிற்கும். கலையும், கலைஞனும் வேறாகப் பிரிவதில்லை. பியானோவின் விஷயத்தில் இது உண்மையானால், யக்ஞ நூற்பு விஷயத்தில் இது இன்னும்

எவ்வளவுதூரம் அவசியமாகிறது என்பதை நான் சொல்லத்தான் வேண்டுமா? இக்காலத்தில் இவ்வாறு நடப்பது சாத்தியமா என்று எண்ணி மலைக்கவேண்டாம். நமது சிந்தனைகளைக் கூடியவரையில் சுத்தமாக வைத்திருந்தால், அதற்கேற்றபடி நமது நடத்தையும் காலக்கிரமத்தில் சீராகிவிடும். இவைகள் எல்லாம் காலஞ்சென்ற முன்னோர்களுக்கே சாத்தியமாக இருந்திருக்கலாம் என்றும் நினைக்கவேண்டாம். நமக்கும் இவை கிட்டுவதுறுதி. ஆனால் இதில் நானே பூரணத்துவமடையவில்லை. எனவே இதுபற்றிவிளக்க எனக்குத் தகுதியேது? நான் அறிந்ததெத்தனையோ! ஆனால் அவற்றின்படி பூரணமாக நடத்திக்காட்ட என்னால் என்று முடிந்தது? உணர்ந்ததை உணர்ந்தபடியே நான் நடத்திக்காட்டியிருந்தால் இன்று நம் நாட்டிலுள்ள ஏழுலக்ஷம் கிராமங்களிலும் ராட்டையின் மதுர ஒலி நிரம்பியிருக்குமே! இன்றுகூட இதுபற்றி நான் அறிந்துள்ளபடி நூற்றுக்கு நூறு அளவில் நடந்து கொள்ளக்கூடுமாயின், நான் இந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டே இருப்பினும் சர்க்காவின் பிரசாரம் காற்றைப்போல் நாடெங்கும் பரவிவிடுமே! ஆனால் பண்டித மாளவியாஜி பாகவத புராண சர்ச்சையில் களைப்படையாது ஈடுபட்டிருப்பதேபோல், நானும் சர்க்கா புராணச் சர்ச்சையிலும் களைப்படையாது பாடுபட்டு வருகிறேன். இந்த சர்க்கா புராணத்தைப்பற்றி எவ்வாறு வர்ணிப்பேன்? புராணங்கள் வருங்காலத் தலைமுறையை உருவாக்கும். இன்று நாம் இந்த சீரற்ற சங்கீதத்தை உருவாக்கிக்கொண்டிருக்கிறோம். கடைசியில் இதிலிருந்து எம்மாதிரியான சுரம் கிளம்பும் என்பது நமது தவத்தின் வலுவையும், தியாகத்தின் அளவையும் பொருத்திருக்கிறது.

யக்ஞ நூற்பில் ஈடுபட்டுள்ளபொழுது மௌனமாக இருப்பதையே ஒரு நியமமாகக் கொள்ளவேண்டும் என்பது என் கருத்து. அச்சமயம் வேறு எண்ணங்களே மனதில் எழக்கூடாது. எழுமாயின், அவை ராட்டை, கதர் சம்பந்தமானதாகவோ அல்லது ராம நாமத்தைப் பற்றியதாகவோ இருக்கலாம். ராம நாமத்திற்கு விரிவான — பரந்த அர்த்தம் கொள்ளவேண்டும். பாடும் பொழுது தம்புராவின் சுருதி எவ்வாறு பாட்டுக்கு இசைந்தே ஒலிக்கிறதோ, அதேபோல் நாமறிந்தோ, அறியாமலோ நம் செயல்கள் அனைத்தினூடும் ராம நாம ஜபம் இழைந்தே நடைபெற வேண்டும். நாம் செய்து கொண்டிருக்கும் வேலையில் ஆழ்ந்த கவனம் செலுத்த முடியவில்லை எனில், முழு மனதுடன் ராம நாமத்தை ஜபிக்கத் தொடங்குவோமானால், முழு கவனத்துடன் வேலை செய்யும் பழக்கம் ஏற்பட்டுவிடும். ராட்டையில் நூற்றுக்கொண்டிருக்கும் பொழுது நாம் பேசிக் கொண்டோ, வேறு எதையேனும் கேட்டுக்கொண்டோ அல்லது ஏதேனும் மற்றொரு வேலையைச் செய்து கொண்டோ இருப்போமாயின், அந்த நூற்பு யக்ஞ நூற்பாகாது. இந்த நூற்பு யக்ஞம் நமது கடமையாக இருக்க வேண்டுமாயின், அந்த நூற்பு சமயத்தில் நாம் அதிலேயே ஆழ்ந்துவிட வேண்டும். யக்ஞ மயமான வாழ்க்கை நடத்த விரும்புவோனும், பற்றற்ற தொண்டுபுரிய விரும்புவோனும் ஒரு சமயத்தில் ஒரே காரியத்தைத்தான் செய்வான். இவ்வளவு அறிந்திருந்தும் கடமையில் தவறும் குற்றவாளிகளில் நானே முதல் ஸ்தானம் வகிக்கிறேன். ஏனெனில் ஒரு நாள் கூட நான் தனிமையாக உட்கார்ந்து, மௌனமாக இருந்துகொண்டு நூல் நூற்றதே கிடையாது. மௌன

விரத தினத்திலும் நூற்றுக்கொண்டே தபால்களைப் படிப் பதைக் கேட்டுக்கொண்டிருப்பேன். அல்லது யாருடைய பேச்சையேனும் கேட்டுக்கொண்டிருப்பேன். இந்தக் கெட்ட வழக்கத்தை நான் விட்டுவிட முடியவில்லை. ஆகவே நியமப்படி நூற்றுக்கொண்டிருந்தேன் என்றாலும் நான் சோம்பேறியாகவே இருந்து வந்தேன் என்றே கூறலாம். அதன் பலனாக மணிக்கு இருநூறு தார்களே (சுற்றுக்களே) என்னால் அதிக பக்ஷமாக நூற்க முடிந்தது. மேலும் நூல் அறுந்து போகாமல் நூற்கவும், கதிரை இணைக்கும் மால் கயிற்றைச் செய்யவும், செப்பனிடவும் எனக்குத் தெரியாது. கதிர் தாங்கிகளான தோல் துண்டு களைப் பற்றி அதிகம் அறியேன். பஞ்சின் தரம், நூலின் தரம் போன்றவைகளையும் நான் நன்றாக அறிந்து கொள்ளவில்லை. நூலையும் ஒரே ராசியாக என்னால் நூற்க முடியவில்லை. இவையெல்லாம் நூற்கையில் அதி லேயே கவனமிற்றி நூற்றதன் பலன்களாகும். யக்ஞத் திற்காக நூற்கும் ஒருவனுக்கு இவையனைத்தும் சோபை தருமா? எனவே கதர் சேவையின் வேகம் குன்றிப் போனதுபற்றி ஆச்சர்யப்படுவதற்கு என்ன இருக்கிறது? தரித்திர நாராயணன் என்பவர் இருப்பது உண்மை; அதில் சந்தேகமே கிடையாது. அவரது பிரசாதமே கதர் என்பது. இவற்றை நன்றாக அறிந்தவனும், அறிந்ததைப் பிறருக்குச் சொல்பவனும் நானேதான். என்றாலும் நானே இந்த தரித்திர நாராயண உபாசனை யில் ஒழுங்கின்றி நடந்துகொண்டு வந்தேன். ஆகவே இவ்விஷயத்தில் வேறு யார் மீதும் குற்றங்கூற என் மனம் ஒப்பவில்லை; அத்தகைய விருப்பமும் எனக்குக் கிடையாது. நான் உனக்கு என் தவறுகளையும், வருத்தத் தையும், அதிலிருந்து எழுந்த எண்ணங்களை மட்டுமே

எடுத்துக்காட்ட விரும்புகிறேன். காகா கலேல்கருடன் நான் இவ்விதம் அடிக்கடி கூறியிருக்கிறேன். ஆனால் உன்னிடந்தான் இதைப்பற்றி இவ்வளவு வெளிப்படை யாகவும், தெளிவாகவும் முதன் முதலில் கூறுகிறேன். இவ்வளவு தெளிவாகச் சொல்ல நேர்ந்ததற்கு ராட்டை யில் நூற்பதையும், பிரஞ்சு பாஷையைக் கற்றுக் கொள் வதையும் ஒன்ருக இணைத்து நீ கேட்டதே காரணமாகும். நீ செய்து வந்ததில் உன் குற்றம் சிறிதும் இல்லை. நான் தான் சர்க்கா மந்திரத்தைப் பூரணமாக அறியவில்லை அல்லது அறிந்தவற்றை செயலில் காட்டவில்லை என்று கருதுகிறேன். எனவே அந்த மந்திரமும் தன் முழு சக்தியையும் வெளிப்படுத்தத் தவறிவிட்டது. யக்ஞ நூற்பு பற்றி நான் கூறியவற்றிலுள்ள அடிப்படையான கருத்தை மனதில் கொண்டு, அதை உன் வாழ்க்கையில் செயல்ப[illegible], [illegible] எத்தகைய அற்புதமான சாந்தியை அனுபவிப்பாய் — வெற்றி பெறு வாய் என்பதைக் கற்பனை செய்து பார். "யோக: கர்மஸு கௌஸலம்" என்பதன் கருத்தே இதுதான். யோக சாதனையே செயல்களில் சிறந்தது. இதைக் கவனத்தில் கொண்டு முடிந்தளவு செயலாற்ற முனைவதோடு, அதிலேயே திருப்தியும் அடையவேண்டும். நம்மையும், நமது சமூகத்தையும் மிகவும் முன்னேற்றமடையச் செய்ய நாம் நமது கடமைகளைச் சரிவர செய்து கொண்டிருக்க வேண்டும் என்று திடமாக நான் நம்புகிறேன். இதைப் பரிபூரணமாக நடைமுறையில் செய்து காட்டாதவரையில் இதை வெறும் புத்தக ஞானமே என்றுதான் கருது வார்கள். செய்து காட்டிய பின்னரே மக்களுக்கு இதில் நம்பிக்கையும், பிடிப்பும் ஏற்படும். இத்திசையில் நான் நாளுக்கு நாள் முன்னேறிக்கொண்டுதான் இருக்கிறேன்.

இதிலிருந்து வெளியே வந்து விடுவாயாயின் என்ன நேரிடும் என்பதைக் கடவுளேதான் அறிவார். இவற்றை யெல்லாம் ஏற்றுக் கொள்வாயாகில் யக்ஞத்திற்காக எவ் வளவு நூற்பது என்று தீர்மானித்திருக்கிறாயோ, அந்த அளவை சாஸ்திரீய முறையில் செய்யவே நீ விருப்ப முறுவது உறுதி. இதர நேரத்தில் இந்த தேசத்தின் செல்வத்தை எவ்விதம் அதிகப்படுத்தலாம் என்று யோசித்துக்கொண்டு நூற்றுக்கொண்டிரு. மேலும் எழுதவே ஆவலுளது. எனினும் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

## ஸந்யாச யோகம்—5.

திங்கள் காலை.

அர்ஜுனன் கேட்கிருன் :—"ஹே பகவான்! ஞானத்தைப்பற்றி அதிகம் கூறினை. அதைக்கேட்ட எனக்குக் கர்மம் செய்யவே தேவையில்லை யென்றும், ஸந்யாசமே மேலான மார்க்க மென்றும் தோன்றுகிறது. ஆனல் கூடவே தொழிலின் பெருமையைப் பற்றியும் கூறினை. அதைக் கேட்டபின் யோகமே (ஸேவா கர்மமே) ஞானத்திலும் சிறந்ததென்று தோன்றுகிறது. இவ்விரண்டில் எது அதிகம் சிறந்தது என்று நிச்சயப்படுத்திக் கூறுவாயானல் எனக்குச் சற்று நிம்மதி யேற்படும்" என்ருன்.

அர்ஜுனன் இவ்வாறு உரைத்தல் கேட்டு, பகவான் சொல்லுகிருர் :—"ஸந்யாச மென்பதற்கு ஞானமென்றும், கர்மயோகமென்பதற்கு நிஷ்காம கர்மம் என்றும் பொருள். இவ்விரண்டும் உத்தமமானவைகளே. ஆனல் யோகம் அல்லது பற்றற்ற கர்மமே சர்வ சிரேஷ்டமானதென்று கூறுவேன். எவனெருவன் எவரிடமும் த்வேஷம் பாராட்டாமலும், விருப்பு வெறுப்புக் கொள்ளாமலும், சுகம், துக்கம், சீதம் உஷ்ணம் முதலிய இரட்டைகளிலிருந்து விலகியும் நிற்கிருனே, அவனே சந்யாசி. கர்மங்களை அவன் செய்தாலும்சரி, செய்யாவிட்டாலும் சரி, அவன் விரைவில் பந்தங்களினின்று விடுபடுகிருன். அஞ்ஞானிகளே ஞானத்தையும் கர்மத்தையும் வெவ்வேறெனக் கருதுகிருர்கள். ஞானி அவ்வாறு கருதான். அவனுக்கு அவை இரண்டும் ஒன்றே. ஏனெனில் அவை இரண்டின் பலனும் ஒரேவிதமானது. ஆகையினல் அவ்விரண்டையும் ஒரே ரூபமானதென்று கருதுவோனே உண்மையறிந்தோனுகிருன்.

ஏனெனில் சுத்த ஞான முடையோன் தனது சங்கற்பத் தாலேயே கார்ய சித்தி யடைகிருன்.

"அதாவது அவனுக்குத் தனது கைகளினுலேயே கர்மம் செய்யவேண்டிய நிமித்தமில்லை. ஒரு உதாரணம்: ஜனகபுரி தீப்பற்றி எரிந்தபொழுது, அவ்வக்னியைத் தணிப்பதே எல்லாருடைய கடமையாக விருந்தது. ஜனகருடைய சங்கற்பத்தாலேயே நெருப்பை அணைக்க உதவி கிடைத்தது. ஏனெனில் இந்தக் காரியத்தை முடிப் பதற்குப் பணியாளரே அவருக்குற்ற சாதனமாக விருந்த னர். அதற்கு மாருக, அவர் தாமே தம் கையில் நீர்க் குடத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டிருப்பாரே யானுல் மிக்க சேதம் ஏற்பட்டிருக்கும். எவ்வாறென்ருல், அனை வரும் அவர் (ஜனகர்) முகத்தையே நோக்கிக்கொண்டிருப் பார்கள்; தங்கள் கடமையை மறந்திருப்பார்கள்; தவிர, அவர்களில் சிலர் தமது வேலையை அரைகுறையாக விட்டு விட்டு, ஜனகரைத் தீ சூழாமல் செய்யவும், அவரைப் பாது காக்கவும் முற்படுவார்கள். ஆனுல் அனைவரும் ஜனகரைப் போல ஆக முடியாது. ஜனகருடைய ஸ்திதி அதிக துர்லபமானது. கோடியில் ஒருவருக்கு, அநேக ஜன்மங் களாகச் சேவை செய்து, அந்த ஸ்திதி பிராப்திக்கும். இந்த ஸ்திதியை அடைந்தபின் ஏதேனும் விசேஷ சாந்தி யாவது சித்திக்கிறதா வென்ருல் அதுவுமில்லை. கொஞ்சம் கொஞ்சமாக நிஷ்காம்ய கர்மம் செய்து வருவதனுல், மனிதனுடைய சங்கற்பமும் விருத்தி யாகிக்கொண்டே வரும். அதற்கேற்ருப்போல் கை கால்களினுல் செய்ய வேண்டிய கர்மங்கள் குறைந்து கொண்டே வரும். ஆனுல் உண்மையைக் கூறுமிடத்து அவனுக்குத் தன்

நிலைமை மாறுபடுவதன் தகவலே தெரியாது. அதற்காக (சங்கற்ப சக்தி) அவன் பிரயத்தனமும் செய்வதில்லை. அவன் சதா சேவா காரியங்களிலேயே மெய்மறந்திருப் பான். ஸேவை செய்வதில் அவனுக்குக் களைப்புத் தோன்றுவதில்லை. முடிவில் அவன் கேவலம் தன் சங்கற் பத்தாலேயே தொண்டு செய்யும் நிலையை அடைந்து விடுகிறான். அதிவிரைவில் சுழன்று கொண்டிருக்கும் பம்பரம் சலனமற்று நிற்பதாகத் தோன்றுவதே போல, முதிர்ந்த பக்குவமடைந்த ஸேவா யோகி சதா தொழில் செய்யாதவனைப் போலவே காணப்படுவான். ஆகவே அவனை ஒரு தொழிலும் செய்யாதவன் என்று கூறுதல் தவறு. சாதாரணமாக அத்தகைய நிலைமையை கற்பனை செய்துகொள்ளக் கூடுமே யன்றி அனுபவத்துடன் வர்ணனை செய்ய முடியாது. இக்காரணம் பற்றியே நான் கர்மயோகத்தை விசேஷப்படுத்திக் கூறினேன். கோடிக் கணக்கானவர்கள் நிஷ்காம கர்மத்தினாலேயே ஸந்யாசத் தின் பலனை எய்துகிறார்கள். அவர்கள் ஸந்யாசிகளாக மாறியிருப்பின், இரண்டும் கெட்டவர்களாவது திண்ணம். ஸந்யாசிகளாகப் பிரயத்னப் படுவோரில் பெரும்பான்மை யோர் பொய்யாசார புருஷர்களாகத் தமது கடமை யிலிருந்து வழுவி விடுகின்றனர்; சர்வ நாசமடைகின் றனர். ஆனால் எவனொருவன் பற்றற்ற தொண்டு செய்து பரிசுத்த மடைகிறானோ, தன் புலன்களை வசப்படுத்திக் கொள்ளுகிறானோ, தன் மனதை வென்று விடுகிறானோ, சகல ஜீவன்களிடத்தும் ஐக்யப்படுகிறானோ, அவனே அனைவரையும் தனக்குச் சமமாகக் கருதுகிறான். அவன் தொழில் புரிந்துகொண்டே அவற்றினின்றும் பிரிந்து நிற்கிறான். அதாவது பந்தங்களிலிருந்து விடுபடுகிறான்.

அத்தகையோன் பேசுதல், நடத்தல் போன்ற கிரியைகளைச் செய்துகொண்டே யிருப்பினும், அவனது கிரியைகளும், இந்திரியங்களும் தத்தமது தர்மானுசாரமாகவே நடந்துகொள்ளும். அவன் தானாகவே ஒன்றும் செய்வதில்லை. வியாதியற்ற ஒருவனுடைய சரீரக் கிரியைகள் ஸ்வபாவமாகவே நடைபெறுகின்றன. அவனது அவயவங்களும் தாமே தமது கடமைகளைச் செய்துவிடுகின்றன. மனிதன் அவற்றின்பால் கவனம் செலுத்தத் தேவையில்லை. இவ்விதமே எவனுடைய ஆத்மா ஆரோக்யமாக விருக்கிறதோ, அது சரீரத்தில் சம்பந்தப்பட்டிருப்பினும், சம்பந்தப்படாததைப் போலவே காணப்படும். அது யாதொன்றையும் செய்வதில்லையென்றே தோன்றும். ஆகையினால் மனிதன் தன் சகல கர்மங்களையும் பிரும்மார்ப்பணம் செய்துவிட வேண்டும். பிரும்மாவின் பொருட்டே சகல கார்யங்களையும் செய்துகொண்டு போகவேண்டும். இவ்விதம் செய்வதனால், அவன் கர்மத்தைச் செய்துகொண்டே யிருப்பினும், அதன் பாவ புண்யம் அவனைத் தொடரா. நீரில் வாழும் தாமரையைப் போல அவன் வாழ்க்கையானது பட்டும் படாமலும் இருந்துவரும்.

செவ்வாய், காலை.

"அதாவது அனுசக்தியை அறிந்தோனாகிய யோகி, மனோ புத்தி காயத்தினால் கார்யத்தைச் செய்துகொண்டேயிருப்பினும், அவன் அவற்றில் பற்றற்று, அகம்பாவமற்று நடந்து கொள்ளுகிறான். சுத்த மடைகிறான். சாந்தி யடைகிறான். யோகமற்றோன் பற்றுதலற்று இருக்கக்கூடாதவனாகையால், கைதியைப் போல் தன் இச்சைகளினால் கட்டுப்படுகிறான். இந்த

நவ துவாரங்களுடைய தேக வடிவான நரகத்தில் யோகியானவன் எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்து, எதனையும் செய்வது மின்றி, செய்விப்பது மின்றிச் சுகமாக இருப்பான். நற்காரியம் செய்வோன், பரிசுத்த மடைந்தோன் பாவமும் செய்வதில்லை; புண் யமும் செய்வதில்லை. கர்மத்திலிருந்து பற்றைக் களைந் தோன், அகம்பாவத்தை அழித்தோன், பலன்களைத் துறந்தோன் நிலை பெற்று நிற்கிறான். அவன் கர்மங் களை அவை செய்யப்படவேண்டியதற்காகவே செய் கிறான். அதாவது தன்னை அக்காரியங்களைச் செய்ய ஒரு கருவியாக மட்டும் கருதுகிறான். அத்தகையோ னைப் பாவ புண்யங்கள் எங்ஙனம் தீண்டும்? இதற்கு மாறாக எவன் அக்ஞானத்தில் மூழ்கிக் கிடக் கிறானோ, அவன் தினமும் "நான் இவ்வளவு புண்யம் செய்தேன்; இவ்வளவு பாவம் புரிந்தேன்" என்று எண்ணிக்கொண்டே யிருப்பான். அவ்வாறு எண்ணிக் கொண்டே அவன் தினந்தோறும் படுகுழியில் விழுந்து கொண்டேபோகிறான். முடிவில் அவன் கணக்கில் பாவங்களே அதிகமாக நிற்கும். ஆனால் எவன் ஞானத்தின் மூலம் தினந்தோறும் தன் அஞ்ஞா னத்தை அழித்து வருகிறானோ, அவனுடைய கார்யங் கள் தினந்தோறும் நிர்மலமடைந்து கொண்டேவரும். உலகம் அவன் கார்யங்களில் பரிபூரணத்துவத்தையும், புனிதத் தன்மையையுமே காணும். அத்தகைய மனிதனுடைய சகல கார்யங்களும் சுபாவமாகவே நடைபெறும். அவன் சமதர்சி (சமத்துவ பாவத்துடன் காண்போன்) ஆகிறான். அவனுக்கு வித்தையும் வின யமும் கற்றுப் பிரும்மாவை அறிவோராகிய பிராமணர்

களும், பசுவும், யானையும், நாயும், விவேகமற்ற விலங்குகளைக் காட்டிலும் கீழ்ப்பட்ட விதமாக நடந்து கொள்ளும் மனிதனும் சமமே. அதாவது இவை யனைத்திற்கும் அவன் ஒரே விதமான ஸேவை செய் வான். ஒன்றைப் பெரிதென மதித்து அதற்கு மரியா தையும், மற்றொன்றைத் துச்சமாகக் கருதி அதற்கு அவமானத்தையும் செய்யான். பற்றற்றோன் தான் எல்லோருக்கும் கடமைப்பட்டோனாக எண்ணுகிறான்; அனைவரின் கடன்களையும் தீர்த்துப் பூரண நியாயம் காட்டுவான். அவனே உலகை வென்றோன்; பிரும்ம மயமானவன். அவனுக்கு யாரேனுமோர் நன்மை செய்தால், அதன் பொருட்டு அவன் மகிழ்ச்சியுறான். அவனை யாரேனும் திட்டினாலும், அதன் பொருட்டு வருத்தமுறான். பற்றுடையோன் வெளியிலிருந்து தனக்காகச் சுகந் தேடுவான். பற்றற்றோனுக்கு அவன் உள்ளத்திலேயே நிரந்தரமான சாந்தி நிரம்பி யிருக்கிறபடியால், அவன் வெளிச் சுகத்தைத் தேடான், அவன் வெளி வாழ்க்கையை முற்றுந் துறந்தவன். இந்தி ரியங்களால் ஏற்படும் சுகம் பின்னால் துக்கத்திற்குக் காரணமாகிறது. காமக் குரோதாதிகளால் ஏற்படும் உபத் திரவங்களைச் சகித்துக் கொள்ளுவதே மனிதனுக்கு உசித மானது. பற்றற்ற யோகி சமஸ்த பிராணிகளின் நன்மை யிலேயே சதா ஈடுபட்டிருப்பான். அவன் சந்தேகங்க ளால் பீடிக்கப் படுவதில்லை. அவனுக்கு வெளி உலக சம்பந்தமே கிடையாது. அவன் பிராணாயாமம் முதலிய பயிற்சிகளினால் தன்னைக் கட்டுப் படுத்தி, ஆசை, பயம், குரோதம் முதலியவற்றினின்றும் தூர விலகி நிற்கின் றான். அவன் என்னையே எல்லோருக்கும் மகேஸ்வரன்,

என்றும், வேள்வியும், தவமும் கொள்வோன் என்றும் அறிந்திருக்கிருன். ஆகவே பரம சாந்தி யடைகிருன்."

எரவாடா மந்திரம்,
8—9—1930.

பாபுவின் ஆசீர்வாதம்.

## ஆத்மஸம்யம யோகம்.

செவ்வாய், காலே.

ஸ்ரீ பகவான் கூறுகிருர் :—"கர்மங்களின் பலனைத் துறந்து எவன் தன் கடமையாகிய கர்மத்தைச் செய்கிருனே, அவனைச் சந்யாசி யென்றும், யோகி என்றும் அழைக்கலாம். எவன் கிரியைகளையே துறந்து விடுகிருனே, அவன் சோம்பேறி. மனம் போன போக்கெல்லாம் காரியம் செய்யாம விருப்பதே சமத்துவ சாதனைகளை விரும்புவோனுக்குச் சிறந்தது. கர்மம் செய்யாமல் அவன் தொழில்கள் நடைபெரு. சமத்துவத்தை யடைந்தோன் சாந்தி யடைகிருன். அதாவது அவன் நினைத்த மாத்திரத்திலேயே செயல்த் திறம் அவனுக்குக் கூடிவிடுகிறது. எப்பொழுது மனிதன் இந்திரிய விஷயங்களிலும், தன் கர்மங்களிலும் பற்றற்ருேனகி விடுகிருனே, தன் மனம் நாடும் விஷயங்கள் அனைத்தையும் துறந்து விடுகிருனே, அப்பொழுது அவனுக்கு யோகசித்தி ஏற்பட்டு விட்டது என்று கூறலாம். அப்பொழுது அவன் யோகாருடன் என்றழைக்கப் படுகிருன்.

"ஆத்மாவின் உத்தாரம் (ஈடேற்றம்) ஆத்மாவிலேயே ஏற்படுகிறது. ஆனது பற்றியே அது தனக்குத் தானே சத்துரு வென்றும் கூறலாம். எவன்

தன் மனதை வென்றுள்ளானே, அவனுடைய ஆத்மா சீதோஷ்ணம், சுக துக்கம், மான அவமானம் இவைகளில் ஒரே விதமாக இருக்கும். ஞான முடையோன், அனுபவ மடைந்தோன், உறுதி யுள்ளோன், புலன்களைத் தன் வசப்படுத்திக் கொண்டோன், மண், கல், தங்கம் இவைகளை ஒரே விதமாக நோக்குவோன் எவனே, அவனே யோகி. அத்தகைய யோகி சத்துருவையும், மித்திரனையும், சாதுக்களையும், பாவிகளையும் சமான மானவர்களாகவே பாவிப்பான். இந்த ஸ்திதியை அடைவதற்குச் சித்தத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். விஷய வாசனைகளைத் துறந்துவிட வேண்டும். ஏகாந்தத்திலமர்ந்து பரமாத்மாவை தியானிக்க வேண்டும். கேவலம் ஆஸனதிகளைப் பயிலுதல் மட்டும் போதாது. சமத்துவ பாவத்தையடைய ஆசைப்படுவோர் பிருமசரியம் முதலிய மகா விரதங்களைத் தவருமல் அனுஷ்டிக்க வேண்டும். இவ்விதம் ஆஸனத்தமர்ந்து, யம நியமங்களைக் கடைப்பிடித்தோனுகித் தன் மனதைப் பரமாத்மாவிடம் ஸ்திரமாகப் பொருத்துவோனுக்குப் பரம சாந்தியேற்படுகிறது. குண்டோதரனைப்போல் மிதமிஞ்சி உண்போனுக்கும், உபவாசமிருப்பவனுக்கும் இந்த யோக நிலை கிட்டாது. அவ்விதமே அதிகம் தூங்குபவனுக்கும், அதிகம் விழித்திருப்பவனுக்கும் இது கைகூடாது. சமத்துவ பாவத்தையடைய விரும்புவோன் தன் உணவிலும், தூக்கத்திலும், விழிப்பிலும் — எல்லாவற்றிலும் நியமமாக நடந்துகொள்ளல் வேண்டும். ஒரு நாள் வயிறு வெடிக்க உண்டு மறுநாள் உபவாசமிருப்பதும், ஒரு நாள் நன்ருகத் தூங்கிவிட்டு, மறுநாள் முழுவதும் விழித்திருப்பதும், ஒரு நாள் நன்ருக உழைத்து வேலை செய்து

விட்டு மறுநாளைச் சோம்பலாகக் கழிப்பதும் யோகத்தின் லக்ஷணங்களல்ல. யோகிக்குச் சதா ஸ்திரச் சித்தம் இருத்தல் வேண்டும். ஆசைகளை வெல்வதில், அவற்றை அவன் ஸ்வபாவமாகவே துறந்தவனாக இருத்தல் வேண்டும். வாயு குறைவாக உள்ள இடத்தில் வைக்கப் பட்ட தீபமானது எவ்வாறு சலனமற்று, ஸ்திரமாக எரி கிறதோ, அதேபோல் உலகம் என்னும் இந்த மாயா விநோத அரங்கத்தில் நடைபெறும் விளையாட்டுகளும், மனதில் சக்கரவட்டமிட்டுக் கொண்டிருக்கும் விசார அலை களும் (எண்ணங்களும்) யோகியை இங்குமங்கும் அலைய விடுவதில்லை; சலனமடைய விடுவதில்லை. இந்த யோகம் மெதுவாக, ஆனால் திடபூர்வமாகப் பிரயத்தனம் செய்வ தால் கைகூடும். மனம் சஞ்சலமுள்ளது. ஆகையினால் அது கண்ட இடமெல்லாம் ஓடும். அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அடக்குவது உசிதமானது. மனம் நிலை பெற்றுவிடின் சாந்தி ஏற்படும். மனதை ஸ்திரப்படுத்து வதற்கு ஆத்ம சிந்தனை செய்தலவசியம். அத்தகைய மனிதன் சகல ஜீவன்களிலும் தன்னைக் காண்கிறான்; உயிர்களனைத்தையும் தன்னிடத்திலும் இப் பிரபஞ்ச முழு வதையும் என்னிடத்திலும் காண்கிறான். அவன் "நான், எனது" என்ற அகங்காரத்தைத் துறந்துவிடுகிறான். சதா என்னையே சார்ந்திருக்கிறான். அத்தகைய யோகியால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை."

அர்ஜுனனுக்கு இந்த யோகம் சிரமமானதாகக் காணப்பட்டது. அவன் கேட்கிறான்:– "ஹே! மதுசூதனா! இந்த மனதை நிலைபெறச் செய்வது எங்ஙனம் பிராப்தி யாகும்? மனமோ குரங்கிற்குச் சமானமானது. காற்றை

அடக்குவது எவ்வளவு அசாத்தியமோ அவ்வளவு அசாத்தியமானது மனதை அடக்குவதும். இந்த மனமானது எவ்விதம், எப்பொழுது வசப்படும்? இவற்றையும் சற்று விளக்குவீராக" என்ருன்.

பகவான் பதிலளிக்கிருர் :— "நண்பா! நீ கூறுவது முற்றிலும் உண்மையானதே. ஆனல் விருப்பு வெறுப்புக்களை ஜயித்து, தளராமல் பிரயத்தனம் செய்வதனல் எத்தகைய கஷ்டமான காரியங்களும் சுலபமாகி விடுகின்றன. மனதை வெல்லாத பரியந்தம் யோகம் சித்திக்காது என்றுணர். இதில் சந்தேகமேயில்லை."

இதைக்கேட்ட அர்ஜுனன் மீண்டும் கேட்கின்ருன்:- "ஹே கிருஷ்ண! ஒருவனிடம் சிரத்தையிருக்கிறது. ஆனல் அவனுடைய பிரயத்தனங்கள் மந்தமானவை என்று வைத்துக்கொள்வோம். அதன் காரணமாக அவன் பலனடைவதில்லை. அந்த யோகிக்கு என்ன கதியேற்படுகிறது? சிதறியடிக்கப்பட்ட மேகராசிகளைப்போல அவனுக்கு நாசமேற்படுவதில்லையே?" பகவான் கூறுகிருர்:— "பார்த்தா! அவ்விதம் சிரத்தையுடையோர் அழிவதில்லை. சன்மார்க்கத்தில் நடக்கும் எவனுக்கும் அவகதி ஏற்படாது. அத்தகைய மனிதர்கள் தங்கள் கர்மானுசாரம் சிறிது காலம் புண்யலோகத்தில் வசித்திருந்தபின், மீண்டும் இம் மண்மீது புனிதமான குடும்பங்களிலே ஜனிக்கின்றனர். (ஆனல் இந்த உலகில் அத்தகைய ஜன்மங்கள் கிடைப்பது துர்லபமானது). ஜனனமடைந்த பின் அவர்களுக்குப் பூர்வ ஜன்மத்தில் செய்த நற்கார்யங்களின் நினைவு உதிக்கிறது. அதன் பலனக இம்முறை அவர்களது பிரயத்தனங்கள் அதிக

நிலைமை மாறுபடுவதன் தகவலே தெரியாது. அதற்காக (சங்கற்ப சக்தி) அவன் பிரயத்தனமும் செய்வதில்லை. அவன் சதா சேவா காரியங்களிலேயே மெய்மறந்திருப்பான். ஸேவை செய்வதில் அவனுக்குக் களைப்புத் தோன்றுவதில்லை. முடிவில் அவன் கேவலம் தன் சங்கற்பத்தாலேயே தொண்டு செய்யும் நிலையை அடைந்து விடுகிருன். அதிவிரைவில் சுழன்று கொண்டிருக்கும் பம்பரம் சலனமற்று நிற்பதாகத் தோன்றுவதே போல, முதிர்ந்த பக்குவமடைந்த ஸேவா யோகி சதா தொழில் செய்யாதவனைப் போலவே காணப்படுவான். ஆகவே அவனை ஒரு தொழிலும் செய்யாதவன் என்று கூறுதல் தவறு. சாதாரணமாக அத்தகைய நிலைமையை கற்பனை செய்துகொள்ளக் கூடுமே யன்றி அனுபவத்துடன் வர்ணனை செய்ய முடியாது. இக்காரணம் பற்றியே நான் கர்மயோகத்தை விசேஷப்படுத்திக் கூறினேன். கோடிக் கணக்கானவர்கள் நிஷ்காம கர்மத்தினுலேயே ஸந்யாசத்தின் பலனை எய்துகிருர்கள். அவர்கள் ஸந்யாசிகளாக மாறியிருப்பின், இரண்டும் கெட்டவர்களாவது திண்ணம். ஸந்யாசிகளாகப் பிரயத்னப் படுவோரில் பெரும்பான்மையோர் பொய்யாசார புருஷர்களாகத் தமது கடமையிலிருந்து வழுவி விடுகின்றனர்; சர்வ நாசமடைகின்றனர். ஆனுல் எவனொருவன் பற்றற்ற தொண்டு செய்து பரிசுத்த மடைகிருனே. தன் புலன்களை வசப்படுத்திக் கொள்ளுகிருனே, தன் மனதை வென்று விடுகிருனே, சகல ஜீவன்களிடமும் ஐக்யப்படுகிருனே, அவனே அனைவரையும் தனக்குச் சமமாகக் கருதுகிருன். அவன் தொழில் புரிந்துகொண்டே அவற்றினின்றும் பிரிந்து நிற்கிருன். அதாவது பந்தங்களிலிருந்து விடுபடுகிருன்.

அந்நங்ஙயோன் பேசுதல், நடத்தல் போன்ற கிரியை களைச் செய்துகொண்டே யிருக்கிறான். அவனது கிரியை களும், இந்திரியங்களும் தத்தமது தர்மானுசாரமாகவே நடந்துகொள்ளும். அவன் தானுகவே ஒன்றும் செய்வ தில்லை. வியாதியற்ற ஒருவனுடைய சரீரக் கிரியைகள் ஸ்வபாவமாகவே நடைபெறுகின்றன. அவனது அவயவங்களும் தாமே தமது கடமைகளைச் செய்து விடுகின்றன. மனிதன் அவற்றின்பால் கவனம் செலுத்தத் தேவையில்லை. இவ்விதமே எவனுடைய ஆத்மா ஆரோக்யமாக விருக்கிறதோ, அது சரீரத்தில் சம்பந்தப்பட்டிருப்பினும், சம்பந்தப்படாததைப் போலவே காணப்படும். அது யாதொன்றையும் செய்வதில்லை யென்றே தோன்றும். ஆகையினுல் மனிதன் தன் சகல கர்மங்களையும் பிரும்மார்ப்பணம் செய்துவிட வேண்டும். பிரும்மாவின் பொருட்டே சகல கார்யங்களையும் செய்து கொண்டு போகவேண்டும். இவ்விதம் செய்வதனுல், அவன் கர்மத்தைச் செய்துகொண்டே யிருப்பினும், அதன் பாவ புண்யம் அவனைத் தொடரா. நீரில் வாழும் தாமரையைப் போல அவன் வாழ்க்கையானது பட்டும் படாமலும் இருந்துவரும்.

செவ்வாய், காலை.

“அதாவது அனுசக்தியை அறிந்தோனுகிய யோகி, மனே புத்தி காயத்தினுல் கார்யத்தைச் செய்து கொண்டேயிருப்பினும், அவன் அவற்றில் பற்றற்று, அகம்பாவமற்று நடந்து கொள்ளுகிருன். சுத்த மடை கிருன். சாந்தி யடைகிருன். யோகமற்ருேன் பற்று தலற்று இருக்கக்கூடாதவனுகையால், கைதியைப் போல் தன் இச்சைகளினுல் கட்டுப்படுகிருன். இந்த

நவ துவாரங்களுடைய தேக வடிவான நரகத்தில் யோகியானவன் எல்லாக் கர்மங்களேயும் மனத்தால் துறந்து, எதனேயும் செய்வது மின்றி, செய்விப்பது மின்றிச் சுகமாக இருப்பான். நற்காரியம் செய்வோன், பரிசுத்த மடைந்தோன் பாவமும் செய்வதில்லே; புண் யமும் செய்வதில்லே. கர்மத்திலிருந்து பற்றைக் களேந் தோன், அகம்பாவத்தை அழித்தோன், பலன்களேத் துறந்தோன் நிலே பெற்று நிற்கிருன். அவன் கர்மங் களே அவை செய்யப்படவேண்டியதற்காகவே செய் கிருன். அதாவது தன்னே அக்காரியங்களேச் செய்ய ஒரு கருவியாக மட்டும் கருதுகிருன். அத்தகையோ னேப் பாவ புண்யங்கள் எங்ஙனம் தீண்டும்? இதற்கு மாருக எவன் அக்ஞானத்தில் மூழ்கிக் கிடக் குருனே, அவன் தினமும் "நான் இவ்வளவு புண்யம் செய்தேன்; இவ்வளவு பாவம் புரிந்தேன்" என்று எண்ணிக்கொண்டே யிருப்பான். அவ்வாறு எண்ணிக் கொண்டே அவன் தினந்தோறும் படுகுழியில் விழுந்து கொண்டேபோகிருன். முடிவில் அவன் கணக்கில் பாவங்களே அதிகமாக நிற்கும். ஆனல் எவன் ஞானத்தின் மூலம் தினந்தோறும் தன் அஞ்ஞா னத்தை அழித்து வருகிருனே, அவனுடைய கார்யங் கள் தினந்தோறும் நிர்மலமடைந்து கொண்டேவரும். உலகம் அவன் கார்யங்களில் பரிபூரணத்துவத்தையும், புனிதத் தன்மையையுமே காணும். அத்தகைய மனிதனுடைய சகல கார்யங்களும் சுபாவமாகவே நடைபெறும். அவன் சமதர்சி (சமத்துவ பாவத்துடன் காண்போன்) ஆகிருன். அவனுக்கு வித்தையும் வின யமும் கற்றுப் பிரும்மாவை அறிவோராகிய பிராமணர்

களும், பசுவும், யானையும், நாயும், விவேகமற்ற விலங்குகளைக் காட்டிலும் கீழ்ப்பட்ட விதமாக நடந்து கொள்ளும் மனிதனும் சமமே. அதாவது இவை யனைத்திற்கும் அவன் ஒரே விதமான ஸேவை செய்வான். ஒன்றைப் பெரிதென மதித்து அதற்கு மரியாதையும், மற்றொன்றைத் துச்சமாகக் கருதி அதற்கு அவமானத்தையும் செய்யான். பற்றற்றோன் தான் எல்லோருக்கும் கடமைப்பட்டோனாக எண்ணுகிறான்; அனைவரின் கடன்களையும் தீர்த்துப் பூரண நியாயம் காட்டுவான். அவனே உலகை வென்றோன்; பிரும்ம மயமானவன். அவனுக்கு யாரேனுமோர் நன்மை செய்தால், அதன் பொருட்டு அவன் மகிழ்ச்சியுறான். அவனை யாரேனும் திட்டினாலும், அதன் பொருட்டு வருத்தமுறான். பற்றுடையோன் வெளியிலிருந்து தனக்காகச் சுகந் தேடுவான். பற்றற்றோனுக்கு அவன் உள்ளத்திலேயே நிரந்தரமான சாந்தி நிரம்பி யிருக்கிறபடியால், அவன் வெளிச் சுகத்தைத் தேடான், அவன் வெளி வாழ்க்கையை முற்றுந் துறந்தவன். இந்திரியங்களால் ஏற்படும் சுகம் பின்னால் துக்கத்திற்குக் காரணமாகிறது. காமக் குரோதாதிகளால் ஏற்படும் உபத்திரவங்களைச் சகித்துக் கொள்ளுவதே மனிதனுக்கு உசிதமானது. பற்றற்ற யோகி சமஸ்த பிராணிகளின் நன்மையிலேயே சதா ஈடுபட்டிருப்பான். அவன் சந்தேகங்களால் பீடிக்கப் படுவதில்லை. அவனுக்கு வெளி உலக சம்பந்தமே கிடையாது. அவன் பிராணாயாமம் முதலிய பயிற்சிகளினால் தன்னைக் கட்டுப் படுத்தி, ஆசை, பயம், குரோதம் முதலியவற்றினின்றும் தூர விலகி நிற்கின்றான். அவன் என்னையே எல்லோருக்கும் மகேஸ்வரன்,

என்றும், வேள்வியும், தவமும் கொள்வோன் என்றும் அறிந்திருக்கிறான். ஆகவே பரம சாந்தி யடைகிறான்.''

எரவாடா மந்திரம்,
8—9—1930.

**பாபுவின் ஆசீர்வாதம்.**

## ஆத்மஸம்யம யோகம்.

செவ்வாய், காலை.

ஸ்ரீ பகவான் கூறுகிறார் :—"கர்மங்களின் பலனைத் துறந்து எவன் தன் கடமையாகிய கர்மத்தைச் செய்கிறானோ, அவனைச் சந்யாசி யென்றும், யோகி என்றும் அழைக்கலாம். எவன் கிரியைகளையே துறந்து விடுகிறானோ, அவன் சோம்பேறி. மனம் போன போக்கெல்லாம் காரியம் செய்யாம லிருப்பதே சமத்துவ சாதனைகளை விரும்புவோனுக்குச் சிறந்தது. கர்மம் செய்யாமல் அவன் தொழில்கள் நடைபெறா. சமத்துவத்தை யடைந்தோன் சாந்தி யடைகிறான். அதாவது அவன் நினைத்த மாத்திரத்திலேயே செயல்த் திறம் அவனுக்குக் கூடிவிடுகிறது. எப்பொழுது மனிதன் இந்திரிய விஷயங்களிலும், தன் கர்மங்களிலும் பற்றற்றோனாகி விடுகிறானோ, தன் மனம் நாடும் விஷயங்கள் அனைத்தையும் துறந்து விடுகிறானோ, அப்பொழுது அவனுக்கு யோகசித்தி ஏற்பட்டு விட்டது என்று கூறலாம். அப்பொழுது அவன் யோகாரூடன் என்றழைக்கப் படுகிறான்.

"ஆத்மாவின் உத்தாரம் (ஈடேற்றம்) ஆத்மாவிலேயே ஏற்படுகிறது. ஆனது பற்றியே அது தனக்குத் தானே சத்துரு வென்றும் கூறலாம். எவன்

தன் மனதை வென்றுள்ளாஞே, அவனுடைய ஆத்மா சீதோஷ்ணம், சுக துக்கம், மான அவமானம் இவைகளில் ஒரே விதமாக இருக்கும். ஞான முடையோன், அனுபவ மடைந்தோன், உறுதி யுள்ளோன், புலன்களைத் தன் வசப்படுத்திக் கொண்டோன், மண், கல், தங்கம் இவைகளை ஒரே விதமாக நோக்குவோன் எவஞே, அவனே யோகி. அத்தகைய யோகி சத்துருவையும், மித்திரனையும், சாதுக்களையும், பாவிகளையும் சமான மானவர்களாகவே பாவிப்பான். இந்த ஸ்திதியை அடைவதற்குச் சித்தத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். விஷய வாசனைகளைத் துறந்துவிட வேண்டும். ஏகாந்தத்திலமர்ந்து பரமாத்மாவை தியானிக்க வேண்டும். கேவலம் ஆஸனதிகளைப் பயிலுதல் மட்டும் போதாது. சமத்துவ பாவத்தையடைய ஆசைப்படுவோர் பிரும்மசரியம் முதலிய மகா விரதங்களைத் தவருமல் அனுஷ்டிக்க வேண்டும். இவ்விதம் ஆஸனத்தமர்ந்து, யம நியமங்களைக் கடைப்பிடித்தோனுகித் தன் மனதைப் பரமாத்மாவிடம் ஸ்திரமாகப் பொருத்துவோனுக்குப் பரம சாந்தியேற்படுகிறது. குண்டோதரனைப்போல் மிதமிஞ்சி உண்போனுக்கும், உபவாசமிருப்பவனுக்கும் இந்த யோக நிலை கிட்டாது. அவ்விதமே அதிகம் தூங்குபவனுக்கும், அதிகம் விழித்திருப்பவனுக்கும் இது கைகூடாது. சமத்துவ பாவத்தையடைய விரும்புவோன் தன் உணவிலும், தூக்கத்திலும், விழிப்பிலும் — எல்லாவற்றிலும் நியமமாக நடந்துகொள்ளல் வேண்டும். ஒரு நாள் வயிறு வெடிக்க உண்டு மறுநாள் உபவாசமிருப்பதும், ஒரு நாள் நன்ருகத் தூங்கிவிட்டு, மறுநாள் முழுவதும் விழித்திருப்பதும், ஒரு நாள் நன்ருக உழைத்து வேலை செய்து

விட்டு மறுநாளைச் சோம்பலாகக் கழிப்பதும் யோகத்தின் லக்ஷணங்களல்ல. யோகிக்குச் சதா ஸ்திரச் சித்தம் இருத்தல் வேண்டும். ஆசைகளை வெல்வதில், அவற்றை அவன் ஸ்வபாவமாகவே துறந்தவனாக இருத்தல் வேண்டும். வாயு குறைவாக உள்ள இடத்தில் வைக்கப் பட்ட தீபமானது எவ்வாறு சலனமற்று, ஸ்திரமாக எரி கிறதோ, அதேபோல் உலகம் என்னும் இந்த மாயா விநோத அரங்கத்தில் நடைபெறும் விளையாட்டுகளும், மனதில் சக்கரவட்டமிட்டுக் கொண்டிருக்கும் விசார அலை களும் (எண்ணங்களும்) யோகியை இங்குமங்கும் அலைய விடுவதில்லை; சலனமடைய விடுவதில்லை. இந்த யோகம் மெதுவாக, ஆனால் திடபூர்வமாகப் பிரயத்தனம் செய்வ தால் கைகூடும். மனம் சஞ்சலமுள்ளது. ஆகையினால் அது கண்ட இடமெல்லாம் ஓடும். அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அடக்குவது உசிதமானது. மனம் நிலை பெற்றுவிடின் சாந்தி ஏற்படும். மனதை ஸ்திரப்படுத்து வதற்கு ஆத்ம சிந்தனை செய்தலவசியம். அத்தகைய மனிதன் சகல ஜீவன்களிலும் தன்னைக் காண்கிறான்; உயிர்களனைத்தையும் தன்னிடத்திலும் இப் பிரபஞ்ச முழு வதையும் என்னிடத்திலும் காண்கிறான். அவன் "நான், எனது" என்ற அகங்காரத்தைத் துறந்துவிடுகிறான். சதா என்னையே சார்ந்திருக்கிறான். அத்தகைய யோகியால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை."

அர்ஜுனனுக்கு இந்த யோகம் சிரமமானதாகக் காணப்பட்டது. அவன் கேட்கிறான்:– "ஹே! மதுசூதனா! இந்த மனதை நிலைபெறச் செய்வது எங்ஙனம் பிராப்தி யாகும்? மனமோ குரங்கிற்குச் சமானமானது. காற்றை

அடக்குவது எவ்வளவு அசாத்தியமோ அவ்வளவு அசாத்தியமானது மனதை அடக்குவதும். இந்த மனமானது எவ்விதம், எப்பொழுது வசப்படும்? இவற்றையும் சற்று விளக்குவீராக" என்ருன்.

பகவான் பதிலளிக்கிருர்:— "நண்பா! நீ கூறுவது முற்றிலும் உண்மையானதே. ஆனல் விருப்பு வெறுப்புக்களை ஜயித்து, தளராமல் பிரயத்தனம் செய்வதனல் எத்தகைய கஷ்டமான காரியங்களும் சுலபமாகி விடுகின்றன. மனதை வெல்லாத பரியந்தம் யோகம் சித்திக்காது என்றுணர். இதில் சந்தேகமேயில்லை."

இதைக்கேட்ட அர்ஜுனன் மீண்டும் கேட்கின்ருன்:- "ஹே கிருஷ்ண! ஒருவனிடம் சிரத்தையிருக்கிறது. ஆனல் [illegible] பிரயத்தனங்கள் மந்தமானவை என்று வைத்துக்கொள்வோம். அதன் காரணமாக அவன் பலனடைவதில்லை. [illegible] என்ன கதியேற்படுகிறது? சிதறியடிக்கப்பட்ட மேகராசிகளைப்போல அவனுக்கு நாசமேற்படுவதில்லையே?" பகவான் கூறுகிருர்:— "பார்த்தா! அவ்விதம் சிரத்தையுடையோர் அழிவதில்லை. சன்மார்க்கத்தில் நடக்கும் எவனுக்கும் அவகதி ஏற்படாது. அத்தகைய மனிதர்கள் தங்கள் கர்மானுசாரம் சிறிது காலம் புண்யலோகத்தில் வசித்திருந்தபின், மீண்டும் இம் மண்மீது புனிதமான குடும்பங்களிலே ஜனிக்கின்றனர். (ஆனல் இந்த உலகில் அத்தகைய ஜன்மங்கள் கிடைப்பது துர்லபமானது). ஜனனமடைந்த பின் அவர்களுக்குப் பூர்வ ஜன்மத்தில் செய்த நற்கார்யங்களின் நினைவு உதிக்கிறது. அதன் பலனுக இம்முறை அவர்களது பிரயத்தனங்கள் அதிக

தீவிரமானவைகளாக இருக்கும். முடிவில் அவர்கள் ஈடேற்றமடைகிருர்கள். இவ்விதம் பிரயத்தனம் செய்து கொண்டே சிலர் விரைவிலும், சிலர் அநேக ஜன்மங்களுக்குப் பிறகும், தத்தமது சிரத்தை, பிரயத்தனம் முதலியவற்றின் பலத்தை அனுசரித்து சமத்துவமடைகிருர்கள். தவம், ஞானம், கர்ம காண்டத்தின் கிரியைகள், ஆகிய இவ்வனைத்திலும் சமத்துவ நிலை விசேஷமானது. ஏனெனில் தவம் முதலியவற்றின் தன்மையும் கடைசியாக சமத்துவமாகவே முடிதல்வேண்டும். ஆகவே நீ சமத்துவ நிலையை அடைந்து, யோகி யாவாய். இதிலும் தன்னலந்துறந்து என்னையே ஆராதிப்போனே சிரேஷ்டனென்றறி.”

இந்த அத்தியாயத்தில் ஆசனம், பிராணுயாமம், முதலிய அனுஷ்டானங்கள் புகழப்பட்டுள்ளன. ஆனல் கூடவே பிரும்மச்சரியம்—அதாவது பிரும்மப் பிராப்தியின் பொருட்டு நேம நியமங்களைக் கொள்ளவேண்டியதன் அவசியத்தைப்பற்றியும் பகவான் கூறியிருப்பதைக் குறிப்பிட வேண்டியதே. ஆஸனாதி கிரியைகளினுல் சமத்துவ பாவம் ஏற்படுவதில்லை. ஆனல் ஆஸனங்கள், பிராணுயாமம் முதலிய அப்பியாசங்கள் மனதை ஸ்திரப் படுத்துவதற்கு ஒரு சிறிது உதவி புரிகின்றன. அதுவும் அந்த உத்தேசத்துடன் அவை செய்யப்பட்டால்தான். இன்றேல் அவற்றை ஒரு விதமான தேகப் பயிற்சி யென்று கருதி, ஏனைய சரீரப் பயிற்சிகளுடன் சேர்க்க வேண்டியதே. தேகாப்யாசம் என்ற இனத்தில் பிராணுயாமம் முதலியவை மிக்க உபயோகமுள்ளவையே. மேலும் தேகாப்யாசங்களில் சாத்வீகமானது இது

